[20th January 1961

(*b*) if so, the reply sent by this Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. A. RASHEED: Is it a fact that the increase in the price of sugar is due to export and if so, may I know the quantity of sugar which has been exported in the last two years?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I have no particulars about the export of sugar and I cannot say that there is any increase in the price of sugar and that such increase is due to export of sugar.

### *Public meetings*

* 24 *Q*.—SRI A. VEDARATHNAM: *கனம் உள்ளிவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—*

*(அ) சமீபத்தில் சென்னை நகரில் பொதுக் கூட்டங்களுக்கு கொண்டுவந்திருக்கும் கட்டுப்பாடு விதிகளை இம்மாநிலத்திலுள்ள எல்லா ஜில்லாக்களிலும் அமுலுக்குக் கொண்டுவரும் உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா?*

*(இ) அப்படியானால், எப்போது?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM: *சென்னையில் பொதுக் கூட்டங்களுக்கு அனுசரிக்கப்படக்கூடிய விதி நல்ல முறையிலே கூட்டங்கள் நடைபெறுவதற்கு அனுகூலமாக இருக்கும் காரணத்தால் தேர்தல் சமீபத்தில் வருவதை முன்னிட்டு இந்த மாகாணத்தில் மற்ற எல்லாப் பகுதிகளிலும் இந்த திட்டம் அமுலுக்கு வரலாம் அல்லவா? அப்படி அமுலுக்கு வந்தால் கூட்டங்களில் கலகம் இல்லாமல் நடப்பதற்கு சாதகமாக இருக்கும் அல்லவா?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: *எந்தெந்த முறையில் பொதுக் கூட்டங்கள் நடைபெறவேண்டும் என்பதுபற்றிய ஏற்பாடுகளை இங்கேயுள்ள போலீஸ் கமிஷனர் செய்திருக்கிறார். இம்மாதிரி மற்ற ஜில்லாக்களிலும் அவசியம் இருந்தால் எவ்வளவு அவசியம் இருக்கிறதோ அந்த அளவிற்கு அங்குள்ள போலீஸ் ஸூப்ரண்டுகள் கவனம் செலுத்தி நடவடிக்கை எடுத்துக் கொள்வார்கள்.*

SRI K. VINAYAKAM: Is it not a fact that in the City of Madras public meetings should not be held after 10 p.m. and the cumulative hours of public meeting should not be more than three hours and if so, will the Government issue instructions to the Commissioner of Police to issue licences for the use of loud-speakers from 7 p.m. to 10 p.m. instead of from 6 p.m. to 9 p.m. as is being

20th January 1961]

done now and within which time a meeting could not be held comfortably with sufficient audience to listen to speeches made in the meeting?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no informa- tion about this matter. If the hon. Member puts a separate ques- tion, I shall answer it.

*Hill allowance*

*** 25 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) 22-8-1960-ல் 279-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலை யொட்டி ஜவ்வாது மலை போன்ற பிரதேசங்களில் உள்ள உத்தியோ கஸ்தர்களுக்கு மலைவாச அலவன்ஸ் கொடுக்கப்படுமா ?

(இ) அப்படியாயின் அதன் விபரமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) There is no such proposal under the consideration of Government.

(இ) Does not arise.

**SRI S. M. ANNAMALAI :** ஜவ்வாது மலைக்கு உள்விவகார அமைச்சர் சென்றுவிட்டு பிறகு மலைவாச அலவன்ஸ் ரத்து செய்யப்பட்டது. அதன் காரணமாக உத்தியோகஸ்தர்கள் அங்கு போக மறுக்கிறார்கள். எல்லா காட்டு அதிகாரிகளும் ஒன்றுகூடி இதைப்பற்றி தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள். ஆகையால் மலைவாச அலவன்ஸ் கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மலைப்பிரதேசத்தில் சுகாதாரக் குறைவு இருக்கக்கூடிய இடங்களில் அலவன்ஸ் கொடுக் கப்பட்டுவந்தது. ஜவ்வாது மலையில் மலேரியா போன்ற பல வியாதிகள் இருந்த காரணத்தால், அன்ஹெல்தி லோக்காலிட்டி அலவன்ஸ் கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது ஜவ்வாது மலையில் சுகாதார குறைவு இல்லாததோடு சுகாதாரத்திற்காகவே இங்கு போகக்கூடிய நிலைமை ஏற்பட்டிருப்பதால் இந்த அலவன்சுக்கு இப்பொழுது தேவையில்லை.

*Secondary Grade teachers*

*** 26 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) 19—4—1960-ம் தேதி நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 739-க்கு அளித்த பதிலையொட்டி எத்தனை செகண்டரி கிரேடு ஆசிரியர்கள் ஹையர் கிரேடு சம்பளம் பெற்று வேலை செய்கி றார்கள்?

(இ) அவர்களில் எத்தனை பேர் 4, 3, 2 ஆண்டுகள் சர்வீஸ் உள்ளவர்கள் ?